

# விலை

**தெ**ற்கு வாசலில் கோவிலுக்குள் நுழையாதீர்கள். இடது பக்கம் திரும்புங்கள். ஒலிபெருக்கி இரைச்சல் கேட்கிறதல்லவா? 'என்னாடி மீனாட்சி' என்பதற்கெல்லாம் பதில் பேசாமல் அந்தப் பெரிய கட்டிடத்துக்கு வாருங்கள். பங்கஜா லாட்ஜ் என்று புதுசாக போர்டு மாட்டி அதைச் சுற்றிலும் பகல் நேரப் பிரயத்தனமாக நாற்பது வாட் பல்புகள் அணைந்து ஏற்றி அணைந்து ஏற்றி, வாசலில் புதிய கான்க்ரீட் நீட்டலில் முழு கர்ப்பமான பூசணிக்காய் மேல் மீசையும் ரத்த நாக்குமாக ஒரு திருஷ்டி பரிகாரன். உள்ளே கல்லாப்பெட்டி லாமினேட் நாற்காலிகள். ஜிலு ஜிலு என்ற ஒரு அலமாரி நிறைய ஜிலேபி நண்டுகள். 'இவ்விடம் கை கழுவவும்.'

இன்று பங்கஜா போர்டிங் அண்ட் லாட்ஜிங் ஆரம்பமாகிறது.

முனிசிபல் சேர்மன் ரிப்பன் வெட்டித் திறப்பு விழா செய்துவிட்டார். புதிய ஓட்டலைப் பதம் பார்க்கலாம் என்று கூட்டம் நிரம்பி வழிகிறது. சர்வர்கள் புத்துடைகளில் பின்னி கம்பெனி முத்திரை இன்னும் இருக்கிறது. முதலாளி சோமசேகரின் குடும்பத்து மனைவிகள் பட்டுப் புடவை கட்டிக்கொண்டு நுனி விரலால் டிபன் சாப்பிட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

ஸாரி! அங்கே நுழைய வேண்டாம். பங்கஜாவுடன் ஒட்டிக்கொண்டு சின்னப் பையன் பயில்வானைத் தோளால் தள்ள முயற்சிப்பதுபோல் அற்பமாக அருகில் நின்றுகொண்டிருக்கும் அடுத்த வீட்டுக்குள் நுழையலாம். சுருள் ஓடு போட்டு சரிந்த கூரை. வாசலில் இரண்டு திண்ணைகள். ஸர்க்கா 1952இல் சிமெண்டைப் பார்த்தவை. திண்ணையில் உட்கார்ந்து தலைமுறை தலைமுறையாகச் சாய்ந்தவர்கள் சாஸ்வதமாக்கிய எண்ணெய்ச் சிறை. அதன் மேல் கார்த்திகை விளக்குப் பிறை. தலையில் இடித்துக் கொள்ளாமல் நுழையுங்கள்.

ரேழி—அந்த இருண்ட கோமணத்தை ரேழி என்றுதான் எங்கள் ஊரில் சொல்வார்கள். அதைக் கடந்ததும் கூடம். கூடத்தின் மத்தியில் ருக்மிணி கலர் அடித்து வெளிறிப்போன நான்கு தூண்கள். மத்தியில் எடுத்துக் கட்டி கூடத்துக்கு வெளிச்சம் தரும் புராதன வென்டிலேஷன் சாதனம். கூடத்தில் இருந்த பொருட்கள் சொற்பமே. ஒரு பலாமர பெஞ்சு ஓரத்தில் பானைமேல் கவிந்த எவர்சில்வர் தம்ளர். அருகே தகரப் பெட்டி. கொடியில் தொங்கிய துணிகள். கூடத்தில் மேல்ஓரத்தில் 'திருமாப் படி' என்று சொல்லப்படும் பூஜை அறை.

அந்த அறைக்குள் பிரபந்தம் படித்துக்கொண்டிருந்த ரங்கய்யங்கார்.

"வாழாட்பட்டு நின்னுள்ளீரேல்
வந்து மண்ணும் மணமும் கொண்மின்
கூழாட்பட்டு நின்றீர்களே எங்கள்
குழுவினில் புகுதலொட்டோம்."

வெளியே லவுட் ஸ்பீக்கர் இப்போது, "டாடி டாடி – பேட்டா பேட்டா" என்றது.

"கோமு! அந்த வாசக் கதவைச் சாத்து" என்றார். ரங்கய்யங்கார் சார்த்திவிட்டு வந்த கோமளா,

"நாள் பூரா பாடிண்டே இருக்கப் போறதா இப்படி?" என்று கேட்டாள். ரங்கய்யங்கார் வெளியே வந்து மனைவிக்குத் திருவாராதன தீர்த்தம் கொடுத்தார்.

"என்ன தெரியலையே! அந்தக் கொடிக் குச்சியைக் கொண்டா. மேல் கதவைச் சாத்திடறேன். ஒரே வெங்காய வாசனை."

"தேவைக்கு அரைக்கறதுக்கு மிஷின் எல்லாம் போட்டிருக்காப்பா. புழக்கடைல உய்ஞ்னு சத்தம் கேட்டுண்டே இருக்கு" என்றாள் ஆண்டாள்.

“நாற்பது நிமிஷத்தில் பத்துபடி அரைஞ்சுருமாம்.”

“அரைக்கட்டும்! உத்தர வீதி பூராவும் இட்டிலியாலேயே ரொப்பட்டும்” என்று ரங்கய்யங்கார் பெஞ்சுமேல் வந்து உட்கார்ந்தார். வயசு ஐம்பத்தைந்து இருக்கும். முகச்சவரம் சமீபத்தில் இல்லாததால் முள்ளு முள்ளாக நரைகலந்த தாடி. ஏராளமான நெற்றியில் திருமண் ஸ்ரீசூர்ணத்தின் நாற்பது வருஷ சுவடு. உயரமான சற்று மெலிந்த தேகம். பெரிசாகப் பற்கள். கழுத்தில் ஒரு ஸ்படிக மாலை. அரதல் பழசான பட்டு சால்வை. பத்தாறு வேஷ்டியில் பஞ்சகச்சம். துன்மதி வருஷ ஸ்ரீரங்கம் கோயில் வாக்கிய பஞ்சாங்கத்தை எடுத்து ஸப் : 39–22 பூசம் 22–38 என்று படித்துக் கொண்டிருந்தார்.

“எலையைப் போட்டுர்றி. எங்கே சின்னது?”

“பாஸ் பண்ணிடுத்தாம். மார்க் கேட்டுண்டு வரேன்னு போயிருக்கு.”

“சீனு?”

“கோவிலுக்குப் போயிருக்கான். சாதம் வாங்கிண்டு இதோ வந்துருவான். எலையைப் போட வேண்டியது.”

“அப்பா! ஜாமெட்ரி பாக்ஸுக்கு இன்னும் பணமே கொடுக்கலை. போன செப்டம்பர் மாசம் வாங்கினது. தமிழரசி பத்து தடவை கேட்டுட்டா.”

“திருப்பிக் கொடுத்துடேன்.”

“சேச்சே. அது நன்னாருக்காது. வாரக் கடைசிக்குள் வரவேண்டிய பணம் இருக்கு. நெல்லு வந்துடுத்துன்னா கவலையில்லை. ஆண்டாள் நீ பாஸா?”

“என்னப்பாது? நான் பாஸ் பண்ணி பர்ஸ்ட் ராங்கில வந்திருக்கேன்னு போன வாரமே சொன்னேனே? மறந்து போய்ட்டியா?”

“இல்லையம்மா” என்று மகளைப் பார்த்தார் ரங்கய்யங்கார். சேப்பு சேப்பாக மூன்று பெண்களை ரங்கநாதன் கிருபை ரங்கநாதன் கிருபை என்று பெற்றுப் போட்டாயிற்று! இப்போது ஆண்டாளின் அழகைப் பார்த்ததும் குபீர் என்று வயிற்றைச் சங்கடம் பண்ணியது. எனக்கு இருக்கிற நிலைக்குப் பரிசாரகன்தான் பண்ணிப்பான். என்ன செய்வது? தென்கலை பையன்கள் எல்லாரும் கல்யாண சமையல்காரர்களாகத்தான் இருக்கிறார்கள்.

“ஆண்டா! வாசல்ல யாரோ கதவைத் தட்டறா பாரு.”

“சீனுவாத்தான் இருக்கணும். அதுக்குள்ள வந்துட்டானே?” வாசல் கதவைத் திறந்தவள் அங்கிருந்தே, “அப்பா, யாரோ வந்திருக்காப்பா.”

“யாரோன்னா யாரு? பேர் விஜாரியேண்டி.”

“இவா வந்திருக்காப்பா . . . நீங்க யாரு?”

“சோமசேகர். பக்கத்து ஓட்டல் ப்ரொப்ரைட்டர்னு சொல்லு.”

சோமசேகர் ஆண்டாளைப் பார்க்க, ஆண்டாள் மேலாக்கைச் சரிசெய்துகொண்டு அவர் கைப்பொட்டலத்தைப் பார்த்தாள்.

"அப்பாவை வரச் சொல்லும்மா."

உள்ளே சென்றாள். ரங்கய்யங்கார் வாசலுக்கு வந்து "நீங்களா! மறுபடியுமா?" என்றார்.

"இந்தாங்க ஸ்வீட்டு! என்னது, ஃபங்க்ஷனுக்கு நீங்க வரவே இல்லையே. பலமுறை கூப்பிட்டேனே!"

"நாத்தான் சொல்லிட்டேனே கொடுக்கறதில்லைன்னு."

சோமசேகர் புன்னகையுடன் செருப்பைக் கழற்றிவிட்டு ஸ்வாதீனமாக உள்ளே வந்து பெஞ்சில் உட்கார்ந்துகொண்டு, "நீங்க கொடுக்க வேண்டாம். ஸ்வீட்டை வேண்டாம்னு சொல்லாதீங்க. எடுத்துக்கங்க. இந்தாம்மா, வாங்கிக்க," என்றான்.

ஆண்டாள் அப்பாவைப் பார்த்தாள்.

"வேளை கெட்ட வேளைல இதெல்லாம் சாப்பிடறதில்லை நாங்க."

"இப்ப சாப்பிடவேண்டாம். சாயங்காலம் சாப்பிடுங்க. நல்ல நெய்யிலே செஞ்சது. உங்களவங்களைத்தான் கிச்சன்ல போட்டிருக்கோம். வாங்கிக்கங்க. என்னது. நீங்க எனக்கு வீடு கொடுக்க வேண்டாம், சினேகிதம்கூடக் கூடாதா?"

"வாங்கிக்கோடி."

செய்தித்தாளை நெய் நனைத்திருந்த பொட்டலத்தை ஆண்டாள் வாங்கிக்கொண்டாள்.

"என்ன சொல்றீங்க! ஏதாவது தீர்மானிச்சீங்களா?"

"இதில் என்ன தீர்மானம் தட்டுக்கிடறது. விக்கறதில்லை விக்கிறதில்லை. எதுக்குத் திருப்பித் திருப்பி மன்றாடறேள்?"

"மீல்ஸ் செக்ஷன், ஒரு அனெக்ஸ் கட்டணுமே?"

"கட்டிக்கங்கோ. ரெண்டு மாடி போட்டிருக்கேளே மேலே ஒண்ணு போட்டுக்குங்கோ."

"பவுண்டேஷன் பத்தாதே. இதுக்கே இன்ஜினியர் தகறார் பண்றானே. கட்டடம் தாங்காதில்லே?"

"அது உங்க பாடு! இந்த வீட்டை நான் குடுக்கமாட்டேன்."

"சரியா யோசிச்சுப் பாத்துச் சொல்லுங்க. எழுபதாயிரம் வரைக்கும் போறேன்."

"நீங்க எங்க வேணா போங்கோ ஸ்வாமி. என்னை விட்டுருங்கோ."

"ஏன்னா ..." என்று ஆரம்பித்தாள் கோமளா.

"நீ சும்மார்றி, அறிவு கெட்ட முண்டமே."

"சேச்சே. கோவிச்சுக்காதீங்க. நான் உங்களுக்கு இன்னொரு

ஆஃபர் தர்றேன். அடைய வளைஞ்சான்ல ஒரு வீடு வெச்சிருக்கேன். இதைவிடப் பெரிசு. அதை வேணா எக்சேஞ்ச் பண்ணிக்கிடலாமா?"

"இதப் பாருங்க சோமசேகர். நான் இந்த வீட்டை விக்க முடியாது. விக்க எனக்கு அதிகாரமும் கிடையாது."

"என்ன அப்படிச் சொல்லிட்டிங்க? வீடு உங்க பேர்லதானே இருக்கு?"

"இது பூர்வீக சொத்து."

"அதுக்குப் பாத்தியதார் நீங்கதானே?"

"அப்படி இல்லை. இது உங்களுக்கு சொன்னாப் புரியாது. கோவிலுக்கு நாங்கள்ளாம் தலைமுறை தலைமுறையா கைங்கர்யம் பண்றவா. அதுக்காக ராமானுஜர் காலத்தில் இருந்து பாத்தியதைகள் சிலது இருக்கு. பேஷ்காருக்கு இன்னது, அரையருக்கு இன்னதுன்னு கோயில் ஒழுகில் எழுதி வெச்சிருக்கு. இந்த வீடு எனக்கு இன்னிக்கு சொந்தம்னா அது ரங்கநாதனுக்குப் பண்ற கைங்கர்யத்துக்கு அவர் கொடுக்கிற கூலி. இதை வித்தா பெருமாள் என் கண்ணைப் புடுங்கிடுவார். இது பார்றா, சன்னிதி வாசல்ல மாந்தோலை அடைச்சுண்டு, கூட்டத்தை விலக்கி கட்டுப்படுத்திண்டு, இது சித்திரைத் தேருக்குத் தண்ணிப் பந்தல் வை. வஸந்தோத்ஸவத்துக்கு மல்லிப் பந்தலா இருந்தது இந்த இடம் – வஸந்தோத்ஸவத்துக்கு பூ கொடுக்கற முறை என்னது. இன்னிக்கும் புழக்கடைலே மல்லிச்செடி இருக்கு. இதைப் பார்த்துக்கடான்னு அனுக்ரஹம் பண்ணியிருக்கார். அதுக்குப் பிரதியா இந்த இடத்தை எங்க குடும்பத்துக்கு சாசனம் பண்ணி வெச்சிருக்கு. என்னவோ லௌகிகங்களுக்காக இப்படி ஒரு கூரையை மேலே கட்டிண்டு ஒரு விசிறியையும் சுத்தவெச்சுண்டு குழல் விளக்கைப் போட்டுட்டு ரேடியோ கேட்டுண்டு நாங்களே ரொம்ப மாறிப் போயட்டோம். பார்க்கப் போனா இதெல்லாம் பாவம்தான். என்ன பண்றது? உயிர் வாழ வேண்டியிருக்கு. இந்தக் கோயிலை விட்டா எனக்கு வேற கதி இல்லை, ஏதோ சில நிமித்தம் பண்ணதை ஒழுங்குமுறை தவறாம பண்ணிண்டிருக்கேன். பெருமாள் கொடுத்த வீட்டை விக்கக்கூடாது. அது மகா பாவம்."

"சரி, எத்தனை கொடுக்கணும்? அதையாவது சொல்லிடுங்க. எண்பதாயிரம்?"

ரங்கய்யங்கார் அவனை ஆச்சரியத்துடன் பார்த்து, "நான் இது வரைக்கும் சொன்னது உங்க காதில விழவே இல்லையா?" என்றார்.

"எல்லாம் கேட்டுது. நீங்க என்ன சொல்றீங்க? பின் பக்கத்தில இருக்கற மல்லிச்செடியை வெட்டக் கூடாதுங்கறீங்க. அவ்வளவுதானே."

"விக்கக் கூடாதுங்கறேன். அது உங்களுக்குக் கேக்கலியா?"

"இத பாருங்கோ அய்யரே! நீங்க சாமி பேர்ல காரணம் சொல்லி வேற ஏதோ காரணத்தை மறைக்கிறீங்கன்னுதான் எனக்குத் தோணுது. நீங்க சாமிக்கு வேண்டியதை செய்யவேண்டாம்னு நான் சொல்றேனா என்ன? எனக்கும் சாமி பக்தி அதிகம்தான். நான் ஏதோ சுமாரா இன்னை தேதிக்கு முன்னுக்கு வந்திருக்கேன்னா அதுக்கு சாமிதான் காரணம். இந்த ஓட்டல் யாருக்கு? சாமி கும்பிட வர்றவங்களுக்குத் தானே? கோவில் இருக்கறதாலதானே இங்க கூட்டம் வர்றது? அதுவும் சாமி கைங்கர்யம்தானே?"

"அப்படி இல்லே. சேவார்த்திகளுக்கு சாதம்போட மடப்பள்ளி இருக்கு. பட்டை சாதம் இருக்கு. சாலிகார் சத்திரம் இருக்கு. இந்த மாதிரி மசால் தோஸையும், லாட்ஜூம், சினிமாப் பாட்டும் கோயில் ஒழுகுல இல்லை!"

"அது காலத்துக்கு ஏத்தப்படி மாற்றம், முன்னேற்றம் அவ்வளவு தானே!"

"இதப் பாருங்கோ, உங்களோட தர்க்கம் பண்ணி முடிக்கிறதுக்குள்ள கோவில்ல சாத்துமுறை ஆய்டும். நீங்க பேஷா ஓட்டல் நடத்துங்கோ, பாட்டுப் போடுங்கோ, ப்ரூட் ஸால்ட் போடுங்கோ, என்னை விட்டுடுங்கோ. நான் விக்கறதில்லை. படாது, கூடாது! போய்ட்டு வாங்கோ."

சோமசேகர் சற்று நேரம் தீர்மானமின்றி நின்றுகொண்டிருந்தான். இளைஞன் என்று சொல்ல முடியாது. முப்பது, முப்பத்து ஒன்று வயசிருக்கும். டஃபேட்டா சில்கில் மணிக்கட்டுவரை கை வைத்து ஷோக்காக சட்டை அணிந்திருந்தான். கைவிரல்களில் மோதிரக் கடையையே வைத்திருந்தான். மீசை துஷ்டத்தனமாக வைத்திருந்தான். வேஷ்டிக் கரையில் சரிகை சரசரக்க கோலாப்பூர் செருப்பு புதுசாக வாங்கினதைக் கோபத்துடன் கால்களில் பொருத்திக்கொண்டு பார்த்துர்றேன் என்று சொல்லிப் புறப்பட்டான்.

"வீட்டு வாசல் தேடி மகாலட்சுமி வந்தா வேண்டாம்னு விரட்டறீங்க... அம்மா! அய்யருக்குப் புத்தி நீங்கதாம்மா சொல்லணும்."

"அய்யர் இல்லை. அய்யங்கார்!" என்றார்.

அவன் போய்விட்டான்.

"எலையைப் போடுறி. அஷ்டமத்திலே சனி நம்மை விடாது போலிருக்கு. எங்க இந்த சீனு!"

சீனுவுக்காகக் காத்திருந்து அவன் கோயிலிலிருந்து கொண்டு வந்த சாதத்தை நேற்றைய மிளகுக் குழம்புடன் சேர்த்து உண்டு பசியாறினார்.

"அப்பா! கோவிந்த மாமா வந்து விசாரிச்சார்" என்றாள் ஆண்டாள்.

“சரி சரி. கோவிந்தனுக்கு என்ன வேலை? சொல்லியாகிவிட்டது அல்லவா ஒண்ணாந்தேதி கொடுத்துவிடுகிறேன் என்று. போகிற வருகிறபோதெல்லாம் பெண்ணையும் பெண்டாட்டியையும் நிறுத்திக் கேட்பதில் என்ன புண்ணியம்?”

சாப்பிட்டு முடித்துவிட்டு சற்று நேரம் நடையில் காற்றோட்டமாகப் படுத்திருப்பார். ஓட்டல் பெரிசாகக் கட்டி விட்டதில் காற்றை நிறுத்திவிட்டது. போதாக்குறைக்கு இந்த வெங்காய வாசனை வேறு. மாவு அரைக்கும் இயந்திரம் வேற. கன்னாரே பின்னாரே என்று சினிமாப் பாட்டு. தூக்கமில்லாமல் உட்கார்ந்துகொண்டு பிரபந்தத்தை ஒரு பத்துச் சந்தை சொல்லலாம் என்று விரித்து வைத்துக்கொள்ள, கோமளா உள் காரியங்களை முடித்துக்கொண்டு, புடவைத் தலைப்பால் வியர்வையைத் துடைத்துக்கொண்டு வந்து அருகில் உட்கார்ந்தாள்.

“அவன் என்ன சொன்னான்?”

“நீயுந்தான் கேட்டுண்டு இருந்தியே!”

“எனக்கு ஒண்ணும் புரியலை.”

“ரொம்ப உத்தமம்.”

“அடைய வளைஞ்சான்ல வீடு கொடுக்கறதுன்னா பேசாம அங்க போயிடலாமேன்னா! இந்த இரைச்சல் தாங்காது போல இருக்கே. குழந்தைகளுக்குப் படிப்புக்குத் தொந்தரவா இருக்கும் போல இருக்கே?”

“விக்கக்கூடாதுடீ. வீடு நம்முதில்லை.”

“பின்ன யாருதாம்?”

“வீடு பெருமாள்து. அவருக்கு கைங்கர்யத்துக்கு மான்யமாக் கொடுத்திருக்கார். அதைப் போய் வித்தா மகா பாவம்.”

“பக்கத்தாத்து திருவேங்கடம் எப்படி வித்தாராம்?”

“பக்கத்தாத்துக்காரன் பாவம் பண்றான்னுட்டு நாமும் பண்ணணுமா?”

“பாவம்னு எப்படிச் சொல்றேள். எத்தனை தலைமுறையா இந்த வீட்டிலே உங்க குடும்பம் இருக்கு? அவா விலை கேட்க வரவா கூட கோவில் வீடுன்னா தேவஸ்தானத்தைக் கேக்க மாட்டாளோ? உங்களைத்தான் வந்து கேக்கறா? அதில இருந்தே வீடு நம்முதுன்னுதானே அர்த்தம் ஆறது?”

“போடீ! உனக்குச் சொன்னாப் புரியாது” என்று அவர் எழுந்து போனார்.

“பொழைக்கத் தெரியாத மனுஷன். கோயில்லே மாந்தோல் பட்டை அடிக்கிறதுக்குத்தான் லாய்க்கு உங்கப்பா.”

“என்னம்மா, அப்பா சொல்றது நியாயம்தானேம்மா.”

“என்ன நியாயம்? பேசாம வித்துர்றதை விட்டுட்டு அத்திம்பேர் தர்க்க நியாயம் எல்லாம் பாத்துண்டிருக்கார்” என்றான் சீனு.

ரங்கய்யங்கார் கோயிலுக்குப் போகும் வழியில் பங்கஜா கோலாகலமாக இருப்பதைப் பார்த்தார். வாசலில் பெரிசாக மேசை போட்டு சோமசேகர் அவரைப் பார்த்துச் சிரித்தான். கெருட மண்டபத்தைத் தாண்டி ரெங்க விலாசத்தைக் கடந்து வலது பக்கம் திரும்பித் தொண்டரடிப் பொடியாழ்வார் சன்னிதியில் கோவிந்தனைப் பார்க்கப் போனார்.

பத்துப் பேர் மத்தியானத் தூக்கத்தைக் கஷ்டப்பட்டு அடக்கிக் கொண்டு கேட்டுக்கொண்டிருக்க உபன்யாசம் நடந்து கொண்டிருந்தது.

"ஒரு சேதன சரீரம். அதனுள்ளிருந்து, அதை இயக்கும் சேதனனுக்கு ஜீவாத்மாவுக்குச் சொத்தாய் அவன் இஷ்டப்படி நடந்துகொள்வதாய், எல்லா நலன்களும் அவனையே நோக்கி இருப்பதாய் உள்ளது போல ஜீவனும் தனக்கு அந்தராத்மாவான நாராயணனையே ஸ்வாமியாய் தனது நலனைப் பேணுவதில் அக்கறையுள்ளவரில் முதல்வனாய் உணர வேண்டும்."

கோவிந்தனின் அருகில் போய் உட்கார்ந்துகொண்டு குரலைத் தாழ்த்தி, "கோவிந்தா! உன்னோட பேசணும்" என்றார்.

கோவிந்தன் உபன்யாசகரைச் சேவித்துவிட்டு, பக்கவாட்டில் நழுவி அவருடன் சன்னிதிக்கு வெளியே வர ரங்கய்யங்கார், "அந்த சோமசேகர் ரொம்ப தொந்தரவு பண்றாண்டா" என்றார்.

"எத்தனைக்குக் கேக்கறான்?"

"கேக்கறது என்னமோ ஜாஸ்திதான். ஏகப்பட்ட பணம். நான் விக்கிறதில்லைன்னு அடிச்சுக் சொல்லிட்டேன்."

"ஏங்காணும்?"

"விக்கக் கூடாதுடா, மகா பாவம்டா."

"இதில என்ன பாவம்? வீடு உம்முதுதான் ஓய்! உங்க குடும்பத்துக்கே என்ன பேர்? மல்லிப்பூ ரங்கய்யங்கார்னு தானே உங்க தாத்தாவுக்குப் பேர். வீட்டுக்கே மல்லிப் பூவாம்னுதானே பேரு. பரம்பரையா வந்த சொத்துதானே? சாஸனம் பண்ணி வெச்சதுதானே! நல்ல விலைக்கு வரதுன்னா வித்துரும்."

"எப்படிடா!"

"ஓய்! விக்கக் கூடாதுன்னு ஏதாவது டாக்குமெண்டில் இருக்கா சொல்லும்?"

"பெருமாள் கைங்கர்யத்தைப் பண்றதுக்குக் கூலிதானே இது."

"நீர் என்ன வீட்டை வித்ததும் கைங்கர்யத்தை நிறுத்திடப் போறீரா? இல்லையே!"

"அப்படி இல்லை."

"ஓய். இதப்பாரும். நம்மை நாமே காப்பாத்திண்டு ஆகவேண்டிய காலம் இது. பெருமாள் அப்படி காப்பாத்திக்கிறதுக்குத்தான் இந்த

மாதிரி சாஸனம் எல்லாம் பண்ணி வெச்சிருக்கார். உமக்கு எல்லாம் பொண்ணு. அதுகளைப் படிக்கவெச்சு கல்யாணம் பண்ணிக் கொடுத்து ... இதுக்கு எல்லாம் எங்க இருந்து காசு வரும்? ஓசைப்படாம வித்துத் தள்ளிடும். அந்த எலிவளைக்கு எத்தனை தரேங்கறான்?"

"எண்பதாயிரம்."

"பின்ன என்ன? மேலேயே கொடுப்பான். இடம் அப்படிப்பட்ட இடம். ஒரு நாளைக்கு அந்த ஓட்டல்ல ஐநூறு சாப்பாட்டு இலை விழறதாம். ஷகரான இடம் பாரும். என்ன கிளம்பிட்டேள்."

"பெருமாளையே பூக்கட்டிக் கேட்டுர்றேன்."

"விவஸ்தையே கிடையாது. ஓய், உமக்கு. இதில பூக்கட்டறதுக்கு என்ன இருக்கு? இப்பல்லாம் பெருமாள் அந்த சோமசேகரன் மாதிரி ஆளுங்கதான்! அவன் மனசு மார்றதுக்குள்ள போய் கையெழுத்தைப் போடும்."

ரங்கய்யங்கார் அகளங்கன் திருச்சுற்று வழியாக உட்சென்று துவஜஸ்தம்பத்தைக் கடந்து படியையே மிதிக்காமல் தாண்டி ஸ்ரீரங்கநாதனின் சந்நிதிக்கு வந்தார். 'சீக்கிரம் திரை போடப் போறா.' கம்பித் தடுப்புகளைக் கடந்து கர்ப்பக்கிருகத்துக்கு அருகே சென்றார்.

"என்னடா ரங்கா, வீட்டை வித்தாச்சா?"

"இல்லை நாணா?"

"வித்தா சொல்லுப்பா. எனக்குக் கைமாத்தா ஒரு முன்னூறு வேணும். தைமாதம் கொடுத்துர்றேன். தீர்த்தம் வாங்கிக்கோ."

"தர்ம சேவை ஆரம்பிக்கப் போறது, திரை போடலாம். சாதம் வந்துதோ? சீனு வந்திருந்தானே?"

தீர்த்தம் சடாரி வாங்கிக்கொண்டு ரங்கய்யங்கார் மிக அருகே சென்றார்.

தன் வீட்டுச் சொந்தக்காரனைப் பார்த்தார். மார்பில் நீலநாயகம் அணிந்துகொண்டு அதிக அலங்காரமில்லாமல் அபய ஹஸ்த வைரம் மட்டும் ஜொலிக்க சின்ன உதட்டில் சிரித்துக்கொண்டிருந்தார். பின்னால் கரிய மாமலைபோல் கிடந்த திருக்கோலம். பெருமாள் அணிந்திருந்த பல்வகை மலர்களைப் பார்த்தார். துழாயின் பச்சை, மல்லிகை, செண்பகம், முல்லை, இருவாட்சி.

'பூவையும், காயாவும் நீலமும் பூக்கின்ற காவி மலரென்றும் காண்தோறும் – பாவியேன். மெல்லாவி மெய்ம்மிகவே பூரிக்கும் அவ்வவை எல்லாம் பிரானுருவே என்று அப்பா ரங்கநாதா! உன்னையே கேக்கறேண்டாப்பா. வீட்டை விக்கலாமா வேண்டாமா? எனக்குப் பணம் தேவையா இருக்கறது என்னமோ வாஸ்தவம்தான். அதுக்காக இந்த மாதிரி உன் கைங்கர்யத்துக்காகக் கொடுத்த வீட்டை வித்துட்டுப் பணம் பண்றது பாவம்னு படறது எனக்கு. மத்தவா எல்லாரும் வித்துட்டா. அவாளை எல்லாம் நீ ஒண்ணும்

பண்ணலை. எல்லாரும் சௌக்கியமாத்தான் இருக்கா. எனக்கு என்ன பண்றதுன்னே தெரியலை! குழப்பமா இருக்கு. அதனால உன்னையே கேட்டுர்றேன். நீயே சொல்லிடு. விக்கலாம்னா மஞ்சளைக் கொடு, கூடாதுன்னா சிவப்பைக் கொடு.'

"நாணா, ஒரு புஷ்பம் கொடுறா." நாராயணய்யங்கார் பூக்குடலையில் இருந்து புஷ்பத்தை எடுத்துக் கொடுத்தார்.

"செம்பகப் பூ!" கண்ணில் ஒத்திக்கொண்டு சென்றார். சாயங்காலம் சோமசேகர் வக்கீல் பாச்சாவைப் பார்த்தான்.

"வாங்க! எப்படி ஓட்டல்லே வியாபாரம் எல்லாம் நன்னா நடக்கிறதா?"

"எல்லாம் உங்க புண்ணியத்தில நல்லாப் போய்க்கிட்டிருக்கு."

"என் புண்ணியம் என்ன உமக்கு? ரங்கநாதர் தாயார் கடாட்சம் இருக்கு! தொட்டதெல்லாம் கொழிக்கறது. விஷயம் என்ன சொல்லுங்கோ!"

"எல்லாம் பக்கத்து வீடுதான்!"

"யாரு ரங்கனுதுதானே?"

"ஆமாம்."

"விக்கறானா இல்லையாமா?"

"மாட்டேங்கறாரு. ரப்பா பேசறாரு."

"எத்தனைக்குக் கேட்டீங்க?"

"எண்பதாயிரம் வரைக்கும் போனங்க."

"அந்த மூக்கோட்டைக்கா எண்பதாயிரம்? அக்கரமம்."

"எடம்தானே நமக்கு முக்கியம்! இடிச்சுக் கட்டிரப் போறமில்லே? இவரு முரண்டு பண்றாரு. விக்கவே மாட்டன்கிறாரு. சாமி கொடுத்தது. சாமிக்கு சேவை பண்ணறதுக்கு மான்யமா எங்க பரம்பரைக்கு வந்த வீடு. குடுக்க மாட்டேன்னு அடிச்சு சொல்லிட்டாரு. ஏறக்குறைய விரட்டிட்டாரு!"

"அப்படியா? திமிரு புடிச்ச பாப்பான்யா அவன்!"

"அது போவட்டும். அவருக்கு என்னமோ மனசு கேக்கலைன்னு வெச்சுக்கலாம். நான் உங்களைப் பார்க்க வந்தது இதுக்குத்தான். உங்களுக்கு அவரைத் தெரியுமுன்னா கொஞ்சம் நல்லதனமா சொல்லிப் பாருங்களேன். அய்யருக்கு அய்யரு கேப்பாருன்னு நம்பிக்கை. உங்களுக்கு அவரு ஒரு வழியிலே உறவுன்னுகூட சொல்லிக் கேள்விப் பட்டிருக்கேன். அதனால நீங்க போயி கேட்டிங்கன்னா, பெரிய மனுசரு நீங்க. உங்க வாக்கைப் கேப்பாருன்னு நம்பிக்கை."

பாச்சா யோசித்து, "உங்களுக்கு என்ன வேணும்? அவனை ஒப்புத்துக்க வெக்கணும். அவ்வளவுதானே" என்றார்.

"அவ்வளவுதாங்க. அடைய வளைஞ்சான்ல கொஞ்சம் பெரிய வீடு ஒண்ணு மாத்தா கொடுக்கறேன்னுகூடச் சொல்லிப் பார்த்தேன்."

"சேச்சே, என்னது! அப்படியெல்லாம் வாக்கு கொடுத்து மாட்டிக் காதீங்க. அந்த வீட்டுக்கு நீங்க ஆஃபர் பண்ணதே ரொம்ப ஜாஸ்தி. உங்களை விட்டா வேற யாரும் அவ்வளவு கொடுக்கமாட்டாங்க."

"சொல்ல முடியாதுங்க. நம்ம போட்டிக்காரன் இருக்கானே. சித்தப்பா மவன். அவனுக்கு விசயம் தெரிஞ்சா வீம்புக்கு ஒரு லச்சம் கேப்பான். கொடுப்பான். எதுக்கும் நீங்க இதை ரகசியமாகவே வெச்சுக்கங்க."

"கவலையேபடாதீங்க. பாச்சாகிட்ட சொல்லிட்டீங்கல்ல. அதை மறந்துருங்க."

வக்கீல் பாச்சா சாயங்காலமே ரங்கய்யங்காரைப் பார்க்கப் போகிற வழியில் தெற்கு வாசலில் கதம்பமும் மல்லிகைப் பூவும் ஒரு டஜன் நீல மாம்பழமும் வாங்கிக்கொண்டு போனார். காரை வாசலில் நிறுத்திவிட்டுச் சன்னமாகக் கதவைச் சாத்திவிட்டு, "சௌக்கியமா ரங்கண்ணா!" என்று விசாரித்துக்கொண்டே உள்ளே சென்றார்.

"வாங்கோ, ரொம்ப நாளாச்சுப் பாத்து."

பாச்சா கோமளாவைப் பார்த்து, "சௌக்கியமா? ஜானகி இப்ப எங்க இருக்கா?" என்றும் விசாரித்து, "இது உம் பொண்ணா?" என்று ஆண்டாளைப் பார்த்துச் சிரித்து, "எத்தனாவது படிக்கிறேம்மா? நன்னா படிக்கிறயா? இந்தா வாங்கிக்கோ" என்றார்.

"உக்காருங்கோ."

"எனக்கு ஜாஸ்தி நேரமில்லை. கட்சிக்காரனை வரச் சொல்லியிருக் கேன். ஒண்ணுமில்லே ரங்கா! சோமசேகர் சொன்னான் இந்த வீடு விஷயமா. என்ன சமாச்சாரம்? ஏன் மாட்டேங்கறே? வித்தா என்ன ஆய்டும்? காலத்துக்கு ஏத்தாப்பல நாமும் மாறணும் ரங்கா. ராமானுஜர் மணவாள மாமுனிகள் சொன்னார், அதை எல்லாம் இந்தக் காலத்துக்கு அப்ளை பண்ணிண்டிருக்க முடியுமா, என்ன? என்னயே எடுத்துக்கோ. மூணு வேளையும் சந்தி பண்றேன். ஏதோ எனக்காக ஆத்மார்த்தமா இருக்கேன். என் பிள்ளை அமெரிக்கா போயிருக்கான். போகாதேன்னு தடுக்க முடியுமா? அங்கிருந்து ஒரு வெள்ளைக்காரியைப் பக்கத்திலே வெச்சுண்டு போட்டோ அனுப்பியிருக்கான். என்ன பண்ண முடியும்? எதுக்கு சொல்றேன்னா ..."

"நீங்க அனாவசியத்துக்கு சிரமப்பட வோண்டாம். நான் வீட்டை விக்கிறதா தீர்மானிச்சுட்டேன் பாச்சா அய்யங்கார்!"

பாச்சா உடனே முகம் மலர்ந்து, "அப்படியா? எப்ப?" என்றார்.

"மத்தியானம் கோவிலுக்குப் போய் ரங்கநாதனைக் கேட்டுட்டேன். சம்மதம் தெரிவிச்சுட்டார். பூக்கட்டிப் பார்த்துட்டேன்."

"சபாஷ். அதான் உத்தமமான காரியம். பெருமாள் இந்த யுகத்துக்கு ஏத்தவர்."

"உங்க கட்சிக்காரன்கிட்டே சொல்லிடுங்கோ. எங்கே கையெழுத்துப் போடணுமோ அதைப் போட்டுட்டாப் போச்சு."

"நீர் எங்கே போவீர்?"

"வடக்கு சித்திர வீதியில் வாத்தியார் ஆத்தில பின்கட்டு காலியாறதாம். அங்கு போயிடறேன். வந்த பணத்தை பாங்கில போட்டு, வர வட்டில ஏதோ மிச்சம் புடிச்சு பொண்ணு கல்யாணம் பண்ணணும். எனக்கும் ஏகப்பட்ட செலவு இருக்குன்னுட்டுத்தான் கேட்டேன். பெருமாள் சரின்னு சொல்லிட்டார்."

"ரொம்ப சரி! அப்ப உங்கிட்ட இந்த வீட்டுப் பாத்தியதைக்கு டாக்குமெண்ட் எதாவது இருக்குமா?"

"இருக்கு."

"என்ன பத்திரமா?"

"இல்லை. ஓலைச்சுவடி."

"ஓலைச்சுவடியா! எங்க கொண்டுவா, பாக்கலாம்... எனக்கு எதுக்கப்பா காப்பி எல்லாம்! சர்க்கரை போட்டிருக்கியா!"

ரங்கய்யங்கார் தகரப் பெட்டியைத் திறந்து பழைய வேஷ்டிகளை எல்லாம் புரட்டி சிவப்பு பட்டில் சுற்றியிருந்ததைக் கொண்டு வந்தார். "அப்பாது, அவர் அப்பா தாத்தா கொள்ளுத் தாத்தா காலத்தில இருந்து இருக்கு இந்தச் சுவடி..."

மஞ்சள் பழுப்பாக இருந்த அந்த ஓலைச்சுவடிகளைப் பாச்சா வாங்கிப் பார்த்தார்.

"ஜாக்கிரதை! பொடிப் பொடியாய்டும்."

"ஏன் ஓய், ஒரு காப்பி எடுத்து வெச்சுக்கக்கூடாதா? இது என்ன லிபி கிரந்தத்தில் இருக்கு. ஸ்ரீமதுபயவே உபய பாஷா ப்ரவீணரான ஸ்ரீபெரும்புதூர் ஸம்பத் குமார சார்ய சுவாமியின் தௌஹித்ரனும் ஆகப்பட்ட மல்லிகைப்பு ரங்கநாதசார்யாருக்கு ச்ரோத்ரியமாக... அதுக்கு மேல படிக்க முடியலை ஓய். சரி, இதும்படி என்ன சொல்றதுங்கறே?"

"இந்த வீட்டை தேவஸ்தானத்தில் சாஸனம் பண்ணிக் கொடுத்திருக்கிறது."

"முனிஸிபால்டி வரி நோட்டீஸெல்லாம் யார் பேருக்கு வரது?"

"இன்னும் தாத்தா பேருக்குத்தான் வரது."

"தாத்தா பேரு?"

"அவரும் ரங்காச்சாரியார்தான்."

"அப்படியா! இந்த வீட்டை விக்க உனக்கு சம்மதம்தானே?"

"சம்மதம்தான். என்ன பண்றது? முடைதான் காரணம்."

"கார்த்தாலே மாட்டேன்னு அடிச்சுச் சொன்னயாமே?"

"சொன்னேன். சுத்துப்பட்டவா பன்னிப்பன்னிச் சொல்லவே பெருமாளையே கேட்டுடலாம்னு, பூ போட்டுப் பார்த்தேன். அவர்கிட்ட இருந்து சமிக்ஞை வந்துடுத்து. எனக்கு இப்ப மனசாட்சி சுத்தமாயிடுத்து!"

"நல்ல காரியத்தைப் பண்ணே. நான் வரட்டுமா ரங்கா. நான் மறுபடி காண்டாக்ட் பண்றேன். உனக்கு விக்க சம்மதம்தானே அப்ப?"

"ஆமாம்."

"எவ்வளவு தர?"

"அதான் அவனே சொன்னானே எண்பது ரூபாய்க்கு..."

"சரி சொல்றேன், நான் வரட்டுமா?"

பாச்சா காரில் ஏறிக்கொள்ளுவதற்கு முன், பக்கத்துப் பங்களாவில் சோமசேகர் இருக்கிறானா என்று பார்க்க, கல்லாவில் அவன் தம்பி இருக்க நேராக சோமசேகரின் வீட்டுக்குச் சென்றார்.

"என்னங்க, காரியம் காயா, பழமா?"

"பாச்சா போனா பழமில்லாம இருக்குமா?"

"ஒத்துக்கிட்டாரா?"

"ஒத்துக்காம பின்ன!"

"எத்தினி கேட்டார்?"

"இத பாருங்க சோமசேகர், உங்களுக்கு எத்தனைக்கு அந்த வீடு வேணும் சொல்லு. நிகரமா ஒரு மதிப்புப் போட்டுச் சொல்லுங்க."

"இடத்துக்குத்தாங்க மதிப்பு, வீட்டுக்குப் பத்தாயிரம் கூடப் பெயராது."

"தேவஸ்தானத்தில் யாரையாவது தெரியுமா உங்களுக்கு? அந்த வீட்டைப் பத்துப் பதினைந்தாயிரத்துக்கு எடுத்துடலாம். இல்லை, மாசம் ஐநூறுக்குள்ள லீஸ் எடுத்துடலாம்."

"நீங்க என்ன சொல்றீங்க... தேவஸ்தானம் எப்படி வரது அதில்?"

"அந்த வீடு அவனது இல்லைன்னு, ரங்கனது இல்லைன்னு சுலபமா எஸ்டாப்ளிஷ் பண்ணிடலாம்."

"எப்படி?"

"அதுக்குத்தான் ஒரு வக்கீல் வேணும்னேன். எல்லாரும் சேர்ந்துண்டு

அந்த வீடு அவனுது அவனுது, அதும் பேரே மல்லிப்பு ரங்கய்யங்கார் வீடுன்னு சொல்லிச் சொல்லி எல்லாரும் 'அது அவனுதுன்னு' நம்ப வெச்சுட்டா. இன்னிக்கு டாக்குமெண்ட் எங்கடான்னு கேட்டேன். காட்டினான். "டாக்குமெண்ட் என்னங்றீங்க?" பாச்சா பெரிய பற்கள் விரிய, 'ஹா!' என்று கண்களில் தண்ணீர் வரும்வரை சிரித்தார். "ஓலைச்சுவடி! வெறும் ஓலைச்சுவடி! பனையோலை. அதுவும் அதில கிரந்தத்திலே எழுதி இருக்கு. என்னமோ கொச கொசன்னு எந்தக் கோர்ட்டிலேயும் அது செல்லாது. அதுதான் அவங்கிட்ட இருக்கிற ஒரே ஒரு புரூஃப்!"

"அப்ப?"

"இதெல்லாம் கோவிலைச் சேர்ந்தது. இந்த ஊரே கோவிலைச் சேர்ந்ததுதான். சோமு எல்லாரும் இப்படித்தான் ஓலை விசிறிக் கட்டை எல்லாத்திலேயும் எழுதி வெச்சுண்டு என்னது என்னதுன்னு கொள்ளை. எல்லாரும் ட்ரெஸ்பாஸ் பண்ணி தலைமுறை தலைமுறையா உட்கார்ந்துண்டுட்டாங்க. அடிச்சுக் கேக்கறவா இல்லை. இப்ப என்ன பண்ணனும், நேரா தேவஸ்தானத்துக்குப் போய், சேச்சே, உங்களுக்கு ஏன் சிரமம்? நானே போறேன். எனக்கு ஈ. ஓவைத் தெரியும் அவரைப் பார்த்து ஒரு கையெழுத்து வாங்கி 'எவிக்ஷன் நோட்டீஸ்' விட்டுரலாம். முதல் தேதி காலி பண்ணிட்டு அப்புறம் நீங்க தேவஸ்தானத்திலே இருந்து அவுட் ரைட்டா வாங்கறாப்பலேயோ, இல்லை, இருபத்தஞ்சு வருஷத்துக்கு லீஸ் எடுக்கற மாதிரியோ ஏற்பாடு பண்ணிடறேன்..."

"அப்ப வீடு அவருது இல்லையா?"

"அவருதா இருந்தாலும் அதை நிரூபிக்கிறது கஷ்டம்!"

"முனிபாலிட்டி ரெக்கார்ட்ஸ் எல்லாம் இருக்குமே ஸ்வாமி!"

"அதையும் கேட்டுட்டேனே. நோட்டீஸெல்லாம் ரங்கநாதன்னு பேர்மேலே வரதாம் – பெருமாள் பேரே ரங்கநாதர்தான்!"

"சரியான வக்கில்ய்யா நீர்... ஆனா இந்த ஆளை நெனைச்சாப் பாவமா இருக்குங்க."

"என்ன பாவம். தலைமுறை தலைமுறையா கோவில் சொத்திலே வாடகை கொடுக்காம இருந்தாச்சு. எங்க கம்யூனிட்டியைத் திட்டறான்னா இதான் காரணம். சொந்தமா சம்பாதிச்சோம், ஏதாவது தொழில் செஞ்சோம்னு இல்லாம கையைத் தேச்சுண்டு உக்காந்துண்டே கார்வார் பண்ணனும். அது நியாயமா? காலம் மாறிப் போச்சில்லே? இப்ப என்னையே எடுத்துக்குங்க. சித்திரை வீதியிலேயே ரெண்டு வீடு கட்டிண்டு இன்னிக்கு செயலா இருக்கேன்னா எல்லாம் சொந்த முயற்சி. ஸ்காலர்ஷிப்பில் படிச்ச எனக்கு எங்கப்பா சொத்தா வெச்சார்! ரெண்டு தங்கைகளுக்கும் கல்யாணம் பண்ணி வச்சு எல்லாம் இந்தக் கைல சம்பாதிச்சுது சோமு. நீங்க கவலையேபடாதீங்க. ஒண்ணாந் தேதி வீடு உங்களுது!"

ஒருவாரம் கழித்து ரங்கய்யங்காருக்கு அருள்மிகு அரங்கநாதர் தேவஸ்தானத்திலிருந்து ஒரு டைப் அடித்த கடிதம் வந்தது. ஆண்டாள் அதைப் பார்த்துப் படித்துச் சொன்னாள்.

"தேவஸ்தானத்துக்குச் சொந்தமான இடத்தில் நீங்கள் இருப்பதால், உடனே அதைக் காலி பண்ணிக் கொடுக்க வேண்டும். இல்லையேல் தகுந்த கோர்ட் நடவடிக்கைகள் எடுக்கப்படும்."

"அய்யோ! என்னது இது! வீடு நம்முதுதானே?"

"என்னன்னு ஒண்ணும் தெரியலையே! நான் எதுக்கும் பாச்சாவைப் போய்ப் பார்த்துட்டு வரேன். அவர் அப்படி ஏதும் சொல்லலையே?"

பாச்சாவின் வீட்டுக்குப் போய்க் கையில் அந்தக் கடிதத்தை வைத்துக்கொண்டு காத்திருந்தார். பூஜைகளையெல்லாம் முடித்துவிட்டு, அரைமணி கழித்து பாச்சா வந்து, "என்ன ரங்கா?" என்றார்.

"இதைப் பாருங்கோ. தேவஸ்தானத்திலேருந்து கடிதாசு வந்திருக்கு."

"என்ன கடுதாசி?" என்று அதை நிதானமாகப் படித்தார். படித்து முடிந்ததும்,

"இப்படி ஒரு சிக்கல் இருக்கா? எனக்குத் தெரியாமப் போச்சே? நானே அந்த சோமசேகர்கிட்டே விக்கறதுக்கு எல்லா ஏற்பாடுகளும் பண்ணி வைக்கும்படியா சொல்லியிருக்கேன்..."

"இவா சொல்றது தப்புதானே?"

"அவாளுக்கும் ஏதாவது டாக்குமண்ட் இருக்குமோ என்னமோ?"

"நீங்க பாத்தேளோல்லியோ? சுவடிலே சாஸனம் பண்ணிக் கொடுத்திருக்கே. அதை வேணா கொண்டு போய்க் காட்டட்டுமா?"

"காட்டுங்க, பேஷாக் காட்டுங்க. ஆனா அவா ஒப்புத்துப்பான்னு தோணலை ரங்க. உங்கிட்ட பத்திரம் கித்திரம் எதும் இல்லையா? சரியாத் தேடிப் பாத்தீங்களா?"

"அப்படி எதும் கிடையாது பாச்சா. அது ஒண்டிதான்!"

"கஷ்டம்."

"என்னது கஷ்டம்கிறேள். இத்தனை தலைமுறையா அந்த வீட்டைப்பத்தி தேவஸ்தானம் ஒண்ணுமே கேட்டதில்லையே? ராமானுஜர் காலத்தில் இருந்து இந்த பட்டா வந்துண்டிருக்கின்னு பெரியவா யாரைக் கேட்டாலும் சொல்வாளே? கோவில் ஒழுகில இந்த மல்லிப்பூ முறையைப் பத்தி சொல்லிருக்கே..."

"கோவில் ஒழுகெல்லாம் இப்ப யார்ங்காணும் பாக்கறா? இந்தக் காலத்துக்கு வேண்டியது ஸ்டாம்பு ஒட்டின பத்திரம். நீர் என்ன

பண்ணிருக்கணும் – சப்ரிஸ்தார் ஆபீஸ்லே போய் பத்திரத்திலே எழுதி வாங்கிண்டிருக்கணும்."

"இப்படி வரும்னு யார் எதிர்பார்த்தா? இப்ப நான் என்ன பண்றது?"

"ஒரு வக்கீலைப் போய்ப் பாருங்கோ. ஒரு ஸ்டே ஆர்டரும் ஏற்பாடு பண்ணச் சொல்லிடுங்கோ. ப்ச்! ஆனா கஷ்டம். முயற்சி பண்ணிப் பார்க்கலாம்."

"நீங்களே அது எப்படி வேணுமோ எழுதிக் கொடுத்துட்டு வந்துருங்களேன்."

"எனக்கு இதுக்கெல்லாம் ஏதுப்பா டயம்? ஆயிரம் வக்கீல் இருக்கா. யாரையாவது போய்ப் பாருங்களேன். ஆனா எனக்கென்னமோ ஜெயிக்கும்னு தோணலை. எதுக்கும் முயற்சி பண்ணிப்பாரும்."

"ஈ ஓவைப் பாக்கட்டுமா? பாத்தா ஏதாவது பலன் வருமா?"

பாச்சா சந்தேகத்துடன் "ம்! பார்க்கலாம்" என்றார். "பாத்துட்டு அவன் என்ன சொல்றான்கறதை எங்கிட்ட வந்து சொல்லும். உமக்கு சாதகமாக ஏதாவது சொன்னா நான் மேற்கொண்டு சோமசேகர்கிட்டே சொல்லி ஏற்பாடு பண்றேன்."

"அதுக்கு என்ன அவசரம்! இப்ப அடிமடியிலே கை விழுந்துடுத்தே பாச்சா. இப்ப இந்த கேஸ் ஜெயிக்கலைன்னா நான் என்ன பண்ணணும்..."

"ஒண்ணும் பிரமாதமில்லை, ஒண்ணாம் தேதி காலி பண்ண வேண்டியிருக்கும். நீர் என்ன பண்றீர். தேவஸ்தானத்தில் அல்லது போலீஸ் ஸ்டேஷன்ல இருந்து ஆள் வந்து சாமானை எல்லாம் எடுத்து வீதிலே போட்டுண்டு அந்த அசிங்கங்கள்ளாம் வேண்டாம். பேசாம ஏதாவது வேறா வீடு பாத்துண்டுடு. வேணும்னா நான் ஏற்பாடு பண்ணித்தறேன். ஏன்னா நீங்க வேற வீட்டுக்குப் போய்க்கூட இதை ஃபைட் பண்ணலாம். உமக்கு கேஸ் இருந்ததுன்னா ஜெயிச்சே தீரும்."

ரங்கய்யங்கார் குழப்பத்துடன் சென்றார். மறுபடி கோயிலுக்குச் சென்றார். கோவிந்தன் தாயார் சன்னதியில் இருந்தான்.

"கோவிந்தா! தேவஸ்தானத்தில் இருந்து கடுதாசி வந்திருக்கு."

"கேள்விப்பட்டேன். எல்லாம் அந்த வக்கீல் பாச்சா பண்ண திரிசமம்."

"பாச்சாவா!"

"ஆமா. இதப்பாரும் ரங்கா! பிராமணனுக்கு பிராமணன்தான் எதிரி. அவன்தான் தேவஸ்தானத்துக்கு வந்து வத்தி வெச்சுட்டான். குமாரசாமி சொன்னான்."

"அடப்பாவி! இப்ப நான் என்ன பண்றது?"

"வேற ஒரு நல்ல வக்கீலைப் போய்ப் பாரும்."

"ஈ ஓவைப் பார்க்கலாமா?"

"அவாளைப் பாக்கறதில ஒண்ணும் பிரயோசனமில்லை. எல்லாரும் இதில கூட்டு!"

ரங்கய்யங்கார் யோசித்து, "எனக்கு இது வேணும்தான். பெருமாள் என்னை சோதிச்சிருக்கார் கோவிந்தா. அன்னிக்குப் பூப்போட்டு படித்தப்ப வித்துருடா என்று சொல்லி ஆழம் பாத்திருக்கார். விக்கறதுக்கு எனக்கு உரிமை இல்லைன்னு தெரிஞ்சுண்டும் அவரைப் போய்க் கேட்டேன் பாரு. நான்தான் மடையன்! இப்ப எனக்குக் கவலையெல்லாம் காலி பண்றதில் இல்லை, கோவிந்தா! வாத்தியார் வீடு இருக்கு. பின்கட்டு நாற்பது ரூபாய்க்குக் கொடுக்கறேன்னு சொல்லியிருக்கார். அங்க போறதில ஒண்ணும் சிக்கலில்லை. ஆனா நாற்பது ரூபாய்க்கு எங்கே போவேன்! மாசா மாசம் கோவில்லே வர்றதை எப்படியோ வெச்சுண்டு தினப்படி சம்சாரத்தை நடத்தியாறது. அதிகப்படியா நாப்பது ரூபாய்னா – பார்க்கலாம். அதுக்கும் ரங்கநாதன் ஏதாவது வழி வெச்சிருப்பான்?"

"அப்ப நீங்க பிராது போடப் போறதில்லையா?"

"எனக்கு வக்கீலுக்கு ஏது காசு கோவிந்தா? இப்ப கேஸ் போட்டு இழுத்தடிச்சு கடைசில தோத்துப் போச்சுன்னா யாருக்குப் பிரயோசனம்?"

"ஜெயிக்கலாமே!"

"இல்லை கோவிந்தா. எனக்குப் பெருமாளோட வழக்காட விருப்ப மில்லை. நியாயமாய்ப் பார்க்கப் போனா அவர் சொல்றது நியாயம் தான். இந்த வீடு பெருமாள்துதான். தேவஸ்தானம் என்ன பெருமாளோட ஆபீஸ்தானே! அவர்தானே திருப்பிக் கேக்கறார். பெருமாள் வீட்டைப் பெருமாளே திருப்பிக் கேக்கறார். அதில எனக்கு உரிமை இல்லை."

"அப்ப இப்படியே இதை விட்டுறப் போறீரா?"

"வேற வழி இருந்தா சொல்லேன் கோவிந்தா."

"எதுக்கும் ஈ. ஓவை ஒரு நடை போய்ப் பார்த்துவிட்டு அதட்டிக் கேளும்!"

"மறுநாள் ஈ. ஓவைப் பார்த்தபோது, அவர் பொறுமையுடன் ரங்கய்யங்கார் சொல்வதைக் கேட்டு விட்டு, "இத பாருங்க, எல்லா ரிக்கார்டையும் பார்த்துட்டோம். அந்த இடம் வெறும் மல்லித் தோட்டமா இருந்தது. உண்டா இல்லையா?"

"தெரியும்."

"அந்தத் தோட்டத்திலே சின்னதா ஒரு குடிசை கட்டிக்கிட்டு உங்க பரம்பரைக்காரங்க இருந்திருக்காங்க. அந்தத் தோட்டத்தைப்

பாத்துக்க வேண்டியது, நித்திய மல்லிச் செடில தினம் பூப்பறிச்சு காலைலே கொண்டாந்து பெருமாளுக்குக் கொடுக்க வேண்டியது. அதுக்காக தோட்ட ஓரத்திலேயே, குடிசை போட்டுக்கிட்டு இருக்கறதா உடன்பாடு இல்லையா?"

"ஆமாம்."

"இப்ப என்ன ஆச்சு? குடிசை வீடாயிடுச்சு. தோட்டம் போயிடுச்சு. இல்லையா?"

"இல்லை. இன்னும் புழக்கடைல செடி இருக்கு ஸார்."

"சரி, தோட்டம் செடி ஆயிடுச்சு. அதனாலே ஆரம்பத்திலே அந்த மானியம் கொடுத்த பர்ப்பஸே போய்டுச்சு இல்லையா? வாஸ்தவமா இல்லையா? சொல்லுங்க."

"நாங்க தினம் பூப்பறிச்சுக் கொண்டுவந்து கொடுக்கிறேமே இன்னைக்கும் . . ."

"எவ்வளவு பூ கொடுக்கிறீங்க! ஒரு முழம் ரெண்டு முழத்துக்கு உண்டானது! அது போதுமா பெருமாளுக்கு? சொல்லுங்க. கோவிலுக்கு வேணுங்கிற மல்லிப் பூவெல்லாம் சாத்தானித் தெருவில் காண்ட்ராக்ட் எடுத்திருக்காங்க. அவங்க கொண்டாந்து தறாங்க. அப்புறம் தினமும் வண்டலூர்லே இருந்து வருது. அதனால . . ."

"அதனாலே . . .?"

"அந்த இடத்தை உங்களுக்கு மானியமாகக் கொடுத்த காரணமே மாறிப் போய்ட்டதாலே தேவஸ்தானம் அதைத் திருப்பிக் கேக்கறதிலே நியாயம் இருக்கா இல்லையா? நீங்களே சொல்லுங்க . . ."

"திருவேங்கடம் வந்து . . ."

"திருவேங்கடம் கேஸை விடுங்க. அவர் மேலே கேஸ் போடப் போறோம். நீங்க சொல்லுங்க. நாங்க செய்தது தப்பா?"

சற்றுநேர யோசனைக்குப்பின், "இல்லை சார்" என்று சொல்லிவிட்டு வெளியே வந்தார்.

மொத்த சாமானுமே ஓர் ஒற்றை மாட்டு வண்டியில் அடங்கி விட்டது. ரங்கய்யங்கார் கையில் பிரபந்த புத்தகத்தையும், சாளக்கிராமத்தையும், கோவிலாழ்வாரையும் அணைத்துக்கொண்டு வண்டிக்குப்பின் நடக்க ஆரம்பித்தார். சீனு ஒரு தகர டின்னை எடுத்துக்கொள்ள, கோமளா சுவாமி படங்களையும் ஒரு மூட்டையையும் பற்றிக்கொள்ள, குழந்தைகள், ஆளுக்கொரு ஸ்லேட்டும், புத்தகமுமாக நடக்க, "எங்கடி ஆண்டா?" என்றார்.

"கடைசியா பூப்பறிச்சிண்டு இருக்கா. ஒரு பதியனை வெட்டிண்டு வான்னு சொன்னேன். அங்கே போய் மல்லிச்செடி போடலாமுன்னு."

"சீக்கிரம் வரச் சொல்லு."

பங்கஜா லாட்ஜின் மாடியில் ஆபீஸ் அறையிலிருந்து ஜன்னல் வழியாக ஆண்டாள் பூப்பறிப்பதைப் பார்த்துக் கொண்டிருந்தான் சோமசேகர்.

பக்கத்தில் கிரேப் ஜூஸை உறிஞ்சிக்கொண்டு பாச்சா, "எப்படி?" என்று கேட்டார். அவர் கண்களில் வெற்றி தெரிந்தது.

ஆண்டாள் இங்கிருந்து வெயிலில் தேவதை போல இருந்தாள். சின்னதாக மார்பு, கன்னங்கரேல் என்று சுருண்ட கேசத்தை தள்ளி விட்டுக்கொண்டு, நளின விரல்களால் ராத்திரி மலர்ந்த புஷ்பங்களைக் கொய்துகொண்டிருந்தாள்.

"இந்தக் காட்சியைத்தான் ... நான் மிஸ் பண்ணப் போறேன். பாச்சா அய்யரே ... மத்தபடி ... ஜெயம்தான்!"

ஒரு வாரத்தில் எல்லாம் ஸெட்டில் ஆகி மல்லிப்பூ ரங்கய்யங்காரின் வீட்டை இடித்துக்கட்ட முதல் கடப்பாறைக் குத்து அதன்மேல் பட்டபோது,

"அண்ணே! தொட்ட உடனே உதிருது அண்ணே!"

1978